9th November 1961]

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** போலீஸ் நிர்வாகத்தின் குறைவு என்று என்றால் ஒருக்காலும் ஒப்புக்கொள்ள முடியாது. போலீசார் தக்கபடி நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள்.

**SRI T. M. NALLASAMI :** 1960-61-ம ஆண்டில் அமோனியம் சல்பேட் உரம் கரும்பு உற்பத்தி செய்பவர்களுக்கு என்று தனியாக ஒதுக்கப்பட்டுள்ளதா? அப்படியானால் அது சரியாக வினியோகம் செய்யப்பட்டிருக்கிறதா?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** கரும்பு உற்பத்தி செய்பவர்களுக்கு என்று தனியாக ஒதுக்கப்பட்டிருக்கின்றது. சில இடங்களில் இதை கூட்டுறவு சங்கங்கள் மூலமாகவும், சில இடங்களில் ஃபாக்டரிகள் மூலமாகவும் வினியோகம் செய்யப்படுகிறது.

**SRI T. K. SUBBIAH :** அரியலூரில் நடந்த உப்பு கலப்படத்திற்கு தென்னாற்காடு ஜில்லாவிலிருந்துதான் காலி சாக்குகள் வந்தன என்று சொல்லப்படுவது உண்மையா?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** அந்தத் தகவல் என்னிடமில்லை.

*Azhagar Hills*

***1933 *Q.*—SRI A. E. CHANDRASEKHARANAYAGAR :** கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மதுரைக்கடுத்த அழகர் மலை யாருக்குச் சொந்தமானது?

(இ) அம்மலையின் பேரில் எத்தனை கோயில்கள், மடங்கள், தீர்த்தங்கள் இருக்கின்றன? அவைகளின் பெயர்கள் என்ன?

(உ) அழகர் மலையின் பேரில் ஜம்புலபுத்தூர் மண்டபம் என்று ஒன்று இருக்கின்றதா? அந்த மண்டபத்தில் வேறு கோயில்கள் கட்ட முயற்சி எடுக்கப்பட்டிருக்கிறதா?

(எ) அப்படியானால் அம்முயற்சிக்கும், சர்க்காருக்கும் சம்பந்தம் என்ன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) It belongs to the Government.

(இ) There are three theerthams on the Hills, Hanumar theertham, Garuda theertham and Nupra Gangai theertham. There are no temples or madams on the Hills.

(உ) There is no mantapam on the Hills known as "Jampulaputhur Mantapam".

(எ) Does not arise.

SRI K. VINAYAKAM : முருகன் பெருமையை எடுத்துக் காட்டுகிற ஆறுபடை வீடுகளில் ஒன்ருகிய பழமுதிர்சோலேதான் இப்போதுள்ள அழகர் மலே என்பது உண்மையா? அது வைஷ்ணவர் கையில் சிக்கி, அதன் மூலம் சைவம் அழிக்கப்பட்டு விட்டதும் வாஸ்தவம்தானு?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த மூலக் கேள்வியை கேட்டிருக்கும் அங்கத்தினர் அவர்கள் தீவிர வைஷ்ணவ ராவார், இந்த உப கேள்வியைக் கேட்கும் அங்கத்தினர் அவர்கள் முருகன் பக்தர் ஆவார். சர்க்காரைப் பொறுத்த வரையில் சைவமும், வைஷ்ணவமும் ஒன்றுதான். இங்கேயே பெருமாள் கோவிலில், விநாயகரும் இருக்கிறது, பைரவரும் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது.

*Sugar Mills, Pennadam*

* 1934 Q.—SRI S. RAMALINGA PADAYACHI : கனம் உள் துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

மூன்ருவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் விருத்தாசலம் வட்டம் பெண்ணுடத்தில் சர்க்கரை மில் ஏற்படுத்த இருந்தது எந்த நிலேயில் உள்ளது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Soundararajan and Company, Madras, obtained a licence in October 1960 from the Government of India for the establishment of a sugar factory at Pennadam under the name and style of Aruna Sugar Limited, with a cane crushing of 1,250 tons per day. Share capital collection and purchase of machinery are in progress.

SRI A. GOVINDASAMY : இந்த ஆலே எப்போது துவங்கும், விவசாயிகளிடமிருந்து இதற்கான விண்ணப்பங்கள் வாங்கப்படு கிறதா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மிஷினரிக்கு ஆர்டர் கொடுத்திருக்கிருர்கள். இன்னும் ஷேர்-காப்பிட்டல் வசூல் செய்யவேண்டும். இந்த வேலேகள் எல்லாம் இருக்கின்றன. நர்சரி பிளான்டேஷன் பற்றி என்னிடம் தகவல் இல்லே.

SRI S. RAMALINGA PADAYACHI : இந்த ஆலே கட்டுவதில், சில நிலச் சொந்தக்காரர்கள், தங்களே ஆலேயின் பங்குதாரர் களாக சேர்த்துக்கொள்ளாததின் காரணமாக அவர்கள் நிலம் கொடுக்க மறுப்பதாகவும், இதன் காரணமாக பாக்டரி கட்டிட வேலே தடங்கல் ஏற்படுகிறது என்றும் சொல்லப்படுகிறது. இது அரசாங்கத்திற்குத் தெரியுமா? அப்படியானுல் அதன்பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப்பற்றி கனம் அங்கத்தினர் அவர்கள் தனியாக கேள்வி போட்டாலோ அல்லது எனக்கு தனியாக எழுதிக் கேட்டாலோ வேண்டிய விவரங்கள் தெரிவிக்கலாம்.